Reg. No. M. 1979




# ARUNODHAYAM

Edited by Rev. S. Gnanamanickam, Rev. D. Rajareegam M. A.,
and Mr. G. T. Williams B.A., L.T.

தமிழ் சுவிசேஷ லுத்தரன் பத்திரிகை

THE TAMIL EVANGELICAL LUTHERAN JOURNAL

**Vol. 86, No. 2** பெப்ருவரி, **1949.**

நீ எழும்பி வெளிச்சமாகு, ஏனெனில் உன் வெளிச்சம்
உன்னண்டை வருகிறது. ஏசாயா 60: 1.

போருள் அட்டவணை



Published by Rev. E. Waengsjoe, Manager, Tranquebar Publishing House,
9, Abirami Street, Vepery, Madras.
Editor: Rev. S. Gnanamanickam, Tranquebar.

## Rates for Domestic Announcements.

| | Rs. | A. | P. |
|---|---|---|---|
| Full page ... ... ... ... | 16 | 0 | 0 |
| Half page ... ... ... ... | 8 | 0 | 0 |
| Quarter page ... ... ... ... | 5 | 0 | 0 |

## Rates for Commercial Advertisements

| | | | |
|---|---|---|---|
| Full page (Cover) per issue ... ... ... | 20 | 0 | 0 |
| Full page (Inside) do ... ... ... | 20 | 0 | 0 |
| Half page (Cover) do ... ... ... | 15 | 0 | 0 |
| Half page (Inside) do ... ... ... | 10 | 0 | 0 |

For other particulars pleases apply to :—

The Tranquebar Publishing House,
9, Abirami Street, Vepery P. O.
MADRAS.

## Subscription Rate for Arunodhayam.

| | | | |
|---|---|---|---|
| Subscription for one year single copy within India | 1 | 4 | 0 |
| do do Outside India, Burmah Ceylon and Malaya | 1 | 8 | 0 |
| do do Germany and Sweden | 2 | 0 | 0 |

---

## BOOK REVIEW

**New Day for Evangelism** by Aaron N. Meckel, Pastor of the First Congregational church, Braintree, Massachsetts (U. S. A.), a leading Evangalist & Minister. PP. 191, Published by E. P. Dutton & Co. Inc. 300, 4th Avenue, New York 10, N. Y. This handy book contains 25 strog straight forward simple and earleat sermons and articles, dealing with such subjects as the power of prayer, church attendance, spiritual indifference, the Bible and the duty of protestantism. Speaking from his heart, with a true courege of conviction, the author discusses how the cynicism, indifference and carelessnes rawpart in the modern world can be replaced by a new sprit of christianity. Christians of all denominations will be inspired by the faith and sincerity of the author, who believes that the true road to happiness lies in Christ and His teachings. price of this excellent book is 2 dollers (is eaqual to Rs. 6/-)

# அருணோதயம்

Edited by Rev. S. Gnanamanickam, Rev. D. Rajareegam M. A., and Mr. G. T. Williams B.A., L.T.

**Vol. 86, No. 2** பெப்ருவரி, **1949.**

## தியானம்

*அந்திரேயா முதலாவது தன் சகோதரன் சீமோனைக் கண்டு பிடித்து அவனிடம்: மேசியாவைக் கண்டு கொண்டோம் என்று சொன்னான்.........அவனை இயேசுவினிடம் கூட்டிக் கொண்டு வந்தான். யோவான் 1: 41. 42.*

அந்திரேயாவின் குருவாகிய யோவான் ஸ்நானகன் நடந்து போகிற இயேசுவைச் சுட்டிக்காட்டி: இதோ தேவ ஆட்டுக்குட்டி என்றான். இவ்வார்த்தைகளால் இயேசுவுக்குப் பின் செல்ல அவன் ஏவுதலடைந்தான். தேவாலயத்தில் பலி செலுத்தப்படும் ஆடுகளையும், வருஷந்தோறும் பஷாப்பண்டிகையில் அடிக்கப்படும் ஆட்டுக்குட்டிகளையும் குறித்து அறிந்திருந்த அந்திரேயாவும், அவன் தோழன் யோவானும் இந்த தேவாட்டுக்குட்டியாகிய இயேசுவைக் குறித்து இன்னும் அதிகமாயறியும்படி அவருக்குப் பின் செல்ல ஆவலடைந்தார்கள். அந்த நாள் முழுவதையும் அவரோடு கழித்தார்கள். இயேசுவின் வார்த்தைகளைக் கேட்கக் கேட்க அவர்கள் உள்ளம் பரவசமடைந்தது. தங்களுக்குக் கிடைத்த மனமகிழ்ச்சியைத் தங்களுக்குள்ளே மறைத்துவைக்க விரும்பவில்லை. அதைப் பிறருக்குச் சொல்லாவிட்டால் அந்திரேயாவின் உள்ளம் வெடித்துவிடும் போலிருந்தது. முந்த தனக்கு அருமையான தன் சகோதரன் சீமோனைத் தேடிக் கண்டுபிடித்து அவனிடம்: மேசியாவைக் கண்டு கொண்டோம் என்று மனமுவந்து சொன்னான். இன்னும் மேசியா வரவில்லையே என்று யூதபக்தர் மிக்க அங்கலாய்ப்புடன் காத்துக் கொண்டிருந்தார்கள். தான் கண்டுகொண்ட விலையேறப் பெற்ற முத்தை தன் சகோதரன் சீமோனும் கண்டுகளிக்க வேண்டுமென்பது அந்திரேயாவின் ஆவல்.

கிறிஸ்தவ திருச்சபைக்குக் கிடைத்திருக்கும் ஒப்புவமையற்ற பொக்கிஷம் இயேசுக்கிறிஸ்துவே. கிறிஸ்துவின் அடியாரனைவரும் அவருடைய மகிமையைப் பிறருக்குப் பிரஸ்தாபம் செய்யவேண்டிய

தொண்டரேயாவார். அவரால் கிடைத்த மீட்பில் பிறரும் பங்குபெற வேண்டுமென்னும் ஆவலற்றவர்களை மெய்க் கிறிஸ்தவர்களென்றழைக்க இடமில்லை. பிறரை இயேசுவண்டை கொண்டுவர வேண்டுமென்னும் பேரவா மெய்பக்தருக்கிருக்க வேண்டிய இன்றியமையா அறிகுறி. இதை எவ்வாறு, எங்கே தொடங்கலாம்? இத்திருப்பணியில் அந்திரேயா நமக்குச் சிறந்த முன்மாதிரியாக விளங்குகிறான். அதற்கென முதலில் தன் குடும்பத்தாரிடத்திலேயே ஆரம்பஞ்செய்ய வேண்டுமென அவனுக்குத் தோன்றிற்று. தன் வீட்டாரின் ஆத்தும நிலைமையைக் குறித்துக் கரிசனங் கொள்ளாதவர்கள், அந்நியருக்காக எப்படிக் கவலை கொள்ளமுடியும்?

நீ உன் வீட்டில் குடும்ப ஜெபத்தை ஒழுங்காய் நடத்துகிறாயா? உன் மனைவி மக்களோடு கோயிலுக்கு ஒழுங்காய்ப் போகிறாயா? நீ கேட்ட பிரசங்கத்தைக் குறித்து உன் வீட்டாரிடம் கலந்து பேசுகிறாயா? உன் குடும்ப அவயவங்கள் ஒவ்வொரு நாளும் தேவ வசனத்தை ஒழுங்காய் வாசிக்கவும், தனி ஜெபம் செய்யவும் ஏவுதலளித்தாயா? உன் மனைவி, பிள்ளைகளிடம் இயேசுவின் ஒப்பற்ற அன்பையும், பாவத்தோடு போராடி வெற்றிபெற அவரளிக்கும் வல்லமையையும் குறித்து எத்தனை முறை பேசியிருக்கிறாய்?

“கிறிஸ்தவ குடும்ப இயக்கம்” என்றொரு அசைவு அகில உலக திருச்சபையில எங்கும் பரவிவருகிறது. தமிழ் கிறிஸ்தவ குடும்பங்களும் இதில் ஈடுபட்டு, நமது குடும்பங்களெல்லாம் தங்களை முற்றிலும் கிறிஸ்துவுக்கென்று அர்ப்பணம் செய்தாலன்றி, நம் மருமைத் தாய்நாடு கிறிஸ்துவின் பாதத்தண்டை மனமுவந்து வருவதற்குத் தடை செய்கிறவர்களாயிருப்போம். நானும் என் வீட்டாரும் கர்த்தரை சேவிக்கிறோம், சேவிப்போம் என்று சொல்லக்கூடிய நிலைமைக்கு வந்தாலன்றி இந்திய திருச்சபை புறமதஸ்தரைக் கிறிஸ்துவுக்கென்று ஆதாயப்படுத்துவது இலேசல்ல.

நம்மைச் சுற்றிலுமிருக்கும் புறமதஸ்தர் கிறிஸ்தவ குடும்பங்களை வெகுவாய் கவனித்துக் கொண்டேயிருக்கிறார்கள். நமது குடும்பங்களிலும் சபைகளிலும் அசமாதானமும், அவபக்தியும், நிர்விசாரமும், உலகப்பற்றும் விளங்குமானால் அவர்கள் அவற்றை எளிதில் கண்டுகொள்வதால் கிறிஸ்துவின் மகிமையையும், வல்லமையையும் அறிய இடமற்றுப் போகிறது. நாமே அவர்கள் கிறிஸ்துவண்டை வந்து அவருடைய மகிமையைக் காணுதபடிக்குத் தடையுண்டுபண்ணுகிறவர்களாவோம். முந்த நமது குடும்பத்தாரனைவரும் கிறிஸ்துவண்டை வந்துசேரவும், அவருடைய மகிமையைக் கண்டு அவருக்குத் தொண்டராகவும் முயற்சி செய்தாலன்றி, நாம் உயிரற்ற கிறிஸ்தவர்களே.



தமிழ் நாட்டிலுள்ள இந்து சமயத்தாரில் ஒரு பகுதியார் தங்கள் மார்க்கத்தில் வாலாயமாயிருக்கும் அவபக்தி, விக்கிரகாராதனை, துர்ப்பழக்கங்கள் பலவற்றை அறவே ஒழித்துத் தங்கள் கொள்கைகளைச் சீர்திருத்திக் கொள்ள பெரும்முயற்சிகளைச் செய்துவருகிறார்கள். தமிழ் சுவிசேஷக் கிறிஸ்தவர்களாகிய நாம் விழித்துக்கொண்டு, நம்மில் காணப்படும் பல குறைவுகளை நிறைவாக்கி, முந்த முந்த நமது குடும்பங்களில் இயேசுவின் மகிமை காணப்படத்தக்கதாக இயேசுவின் பாதத்தண்டை நமக்கருமையான ஒவ்வொருவரையும் விரைவில் கொண்டுவந்து சேர்க்க முயலுவோமாக.

## பத்திராதிபர் குறிப்புகள்

ஒரு கிறிஸ்தவன் ஒவ்வொரு நாளும் நினைக்கவேண்டிய முதல் தோழர் இயேசு, நாடவேண்டிய முதல் ஆள் பரம தகப்பன், செய்ய வேண்டிய முதல் வேலை ஜெபம், தேடவேண்டிய முதல் நன்மை பரிசுத்த ஆவி, பார்க்கவேண்டிய முதற்பொருள் வேதாகமநூல், அறிய வேண்டிய முதல் காரியம் தேவசித்தம், போதிக்கவேண்டிய முதல் மாணவன்தான்தானே.

மூட்டுவது எளிது, ஆற்றுவது அரிது. குலைப்பது எளிது, இணைப்பது அரிது. இடிப்பது எளிது, கட்டுவது அரிது. தூற்றுவது எளிது, மாற்றுவது அரிது. வெட்டுவது எளிது, ஒட்டுவது அரிது. ஆகையால் எதனையும் யோசித்துப் பேசு, யோசித்துச் செய்.

இம்மாத அருணோதய வெளியீட்டில் 16-வயதுக்குட்பட்ட சிறுவர் சிறுமியா வேத ஆராய்ச்சியில ஈடுபடுவதற்கென ஒரு புதிய தலைப்பை ஏற்படுத்தியிருக்கிறோம். அதிலுள்ள விஞக்களுக்குப் பிழையற விடையளிப்போருக்கு சம்மானமும் அளிக்கப்படும்.

பெப்ருவரிமீ 13-ம் தேதி மருத்துவசாலை ஞாயிறாகக் (Hospital Sunday) கொண்டாடப்படும். அத்தினத்தில் நம் நாட்டிலுள்ள கிறிஸ்தவ மருத்துவசாலைகளுக்கென்று விசேஷித்த காணிக்கைகளைத் தேவாராதனையில் சேர்த்தனுப்புவது நமது சபைகளின் கடமையாகும். கிறிஸ்தவ அன்பின் தொண்டில் ஈடுபட்டிருக்கும் இந்நிலையங்களை நமது ஜெபங்களாலும் பொருளுதவியாலும் உற்சாகப்படுத்துவோமாக.

மகாகனம் அத்தியக்ஷரவர்களின் புத்தக நிலையத்தில் பூர்வீக பல்லாண்டுகளின் அருணோதய வெளியீடுகளின் தொகுப்புச் சுவடிகளில் பலவற்றை இரவல் வாங்கின சகோதரர் அவற்றைக் கடிதில் திருப்பிக் கொடுக்கக் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள். அன்றியும் 1874-ம் ஆண்டுமுதல் 1914-ம் ஆண்டுவரையுமுள்ள அருணோதய வெளியீடுகளின் தொகுப்புச் சுவடிகளை விற்க மனமுடையோர் அதைக்குறித்து அத்தியக்ஷரவர்களின் ஆபீசுக்கு எழுதிக்கேட்கலாம்.

# காலஞ்சென்ற கனம் R. Froelich பண்டிதர்

சென்றமாத அருணோதய வெளியீட்டில் தகப்பன் பிரேலிக் பண்டிதரின் மரணத்தைப்பற்றிய ஒரு சிறு குறிப்புடன் அவருடைய உருவப்படத்தை வெளியிடக் கூடியதாயிருந்தது. இச் செய்தியைக் கேட்டு நமது தமிழ்க் கிறிஸ்தவர்களில் பெரும்பகுதியினர் துக்கத்திற்குள்ளானார்கள். ஆயினும் சற்று யோசித்துப் பார்க்கையில், இச் சிறந்த தேவ திருமறைத் தொண்டனை நம் நாட்டிற்குச் சுவிசேஷ தூதுவராக அனுப்பின பரம தகப்பனுக்கும் ஜர்மானிய லேப்சிக் மிசியோன் சங்கத்தாருக்கும் நமது மனமார்ந்த நன்றியைச் செலுத்த ஆழ்ந்த கடமைப்பட்டிருக்கிறோம். அவரின் ஞாபகம் நம்மெல்லோரையும், சுவிசேஷப் பிரபல்லிய சேவையில் இன்னுமதிகமாய் ஈடுபடவும், அமளியற்ற அமைதியுள்ள பக்தியொழுக்கத்தைப் பின்பற்றவும் ஏவிவிடவும் வேண்டும். அவர் எழுதிய சிறந்த நூற்களைச் சென்னையிலுள்ள நமது புத்தகசாலையில் வாங்கிப் படிப்பதால் நமக்கு மிக்க நன்மையுண்டாகும். ஜெர்மனி தேசத்தில் 1868-ம் ஆண்டில் டிசம்பர்மீ 13-ம் தேதி பிறந்து, 1892-ம் ஆண்டில் நமது தமிழ் தாய் நாட்டிற்குச் சுவிசேஷ தூதுவராய் வந்து, தரங்கை, நாகபட்டணம், மாயவரம், தஞ்சாவூர், சென்னை முதலிய பல இடங்களில் சேவை புரிந்து 1936-ம் ஆண்டில் தமது தாய் நாடு திரும்பி, தமிழ் சுவிசேஷ லுத்தரன் சபையின் நன்மைக்காக கடைசி வரையில் ஜெபித்தும் உழைத்தும் வந்து சென்ற நவம்பர்மீ 21-ம் தேதி கர்த்தருக்குள் மரித்து 25-ம் தேதி அடக்கம் செய்யப் பெற்றார். தங்கள் அன்பிற்கு அறிகுறியாக மலர்மாலைகளை அடக்கத்திற்கு முன் அனுப்ப விரும்பிய நண்பர்கள் அதற்குப் பதிலாக மிஷன் வேலைக்கென்று ஓர் பணச் சேர்ப்பு செய்யக் கேட்டுக் கொள்ளப்பட்டனர். அவரது மனைவி பூர்வ லேப்சிக் மிஷனேரியாயிருந்த கனம் Schanz ஐயரின் குமாரத்தியும் தமது கணவரின் சாந்த குணம் பொருந்திய உத்தம தாய். பிரேலிக் சாஸ்திரியார் சபை குருவாகவும், ஆலோசனை சங்க அவயமாகவும், செமினேரி, உபாத்திமை பாடசாலைத் தலைவராகவும், குருக்குழுவென்ற குருமாரின் பயிற்சி வகுப்பின் தலைமை ஆசிரியராகவும் செய்திருக்கும் சேவையை அளவிடமுடியாது. அவர் பின்வைத்துப் போயிருக்கும் அவரது மனைவியாருக்கும் பிள்ளைகளுக்கும் நமது உள்ளக்கனிவான அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம். குருக்குழு வகுப்பில் அவரது மாணவராயிருந்து, பிறகு ஜர்மானிய தேசத்தில் அவரைக் கண்டு சந்தித்து, அவருடைய இல்லத்திலும் தங்கி அவரது அன்பை அனுபவித்தவராகிய புதுக்கோட்டை மிஷன் உயர்தர கலாசாலையின் தலைவராயிருக்கும் உயர்திரு சா. தேவநேசன் அவர்கள் அனுப்பிய புகழ்மாலையை இதற்கடியில் வெளியிடுகிறோம்:—



கனம் பொருந்திய தகப்பனுக்கு அன்பார்ந்த மாணவரின் புகழ்மாலை

குருகுலத்தில் வேதசாஸ்திரம் மூன்று வருடம் நான் கற்றபோது பரமகுருவின் சகவாசத்திற்கு என்னையும் மற்ற உடன்மாணவரையும் வழிநடத்துவதற்கு மனித குருவாக வாய்த்திருந்தவர் பிரேலிக் சாஸ்திரியாராவர். 'சாஸ்திரியார்' என்ற பட்டம் அவருக்குத்தான் மிகப் பொருத்தம். கிரேக்கு, எபிரேயு, ஜெர்மன், ஆங்கிலம், தமிழ், சமஸ்கிருதம் முதலிய பாஷைகளில் அவர் நன்றாகப் பாண்டித்தியம் பெற்றிருந்தார். ஹிந்துமத புராணங்கள், வேதங்கள், தமிழ் நூல்கள் முதலியவற்றை மிகவும் நன்கு ஆராய்ந்து படித்திருந்தார். தமிழ் செய்யுட்களினின்றும் பத்துக் கற்பனைகளுக்கு இணையானவற்றை ஆய்ந்தெடுத்து எங்களுக்குக் கற்பித்தார். சமஸ்கிருதத்திலேயே பகவத் கீதையை எங்களுக்குப் போதித்தவரும் அவரே.

ஆயினும் அவருடைய பாண்டித்தியம் மாத்திரம் எங்கள் மனதை அவர்பால் இழுத்ததென்பதல்ல, அவருடைய களங்கமற்ற பக்தி அவர் வேதசாஸ்திரத்தைப் போதிப்பதற்கு பெரும்பாத்தியதையை அளித்தது. சுவிசேஷ வேலை செய்யப்போகிறவர்களுக்கு அவர் கொடுக்கும் முதல் குறிப்பு பின்வருமாறு: "நீ யாருக்குப் பேச வேண்டுமென்று எண்ணுகிறாயோ, அவர்களுக்குப் பேசும் முன்னால் அவர்களுக்காகவும் உனக்காகவும் ஆண்டவரண்டை பேசு" என்பதே. அவருடைய முழுஜீவியமுமே ஒரு ஜெபஜீவியமென்பது பொருத்தமாகும். காலையிலும் மாலையிலும் அவர் தமது இல்லத்தின் தாழ்வாரத்தில் உலாவும் போதும் அவர் தமது ஆசனத்தில் அமர்ந்திருக்கும்போதும் அவரைக் கவனித்தவர்கள் அவர் ஜெபத்திலும் தியானத்திலும் இருக்கிறார் என்பதை நன்குணர்வார்கள். "குருசிஷ்ய சகவாசம்" என்பதை அவர் எங்கள் வகுப்பில் போதித்தவர் மாத்திரமன்று, அனுதினமும் தமது ஜீவியத்தில் சாதித்தவராவர்.

அவரது எளிய வாழ்க்கையும் எங்கள் உள்ளத்தை மிகவும் கவர்ந்தது. சாதாரணத்துணியில் அவர் உடையணிவார். பரம சாது என்ற பெயர் அவருக்குப் பெரிதும் பொருந்தும். ஏழைகளின் நண்பராவர் அவர். அவர் வீட்டில் தனியாக இருக்கும்போது யாராவது பிச்சைக்காரன் வந்தால் தாமே நேராக சமையல் கட்டுக்குச் சென்று ரொட்டியில் வெண்ணை தடவிக் கொடுப்பார். ஹிந்து சந்நியாசிகள் அவரண்டை அடிக்கடி வந்து உறவாடுவார்கள். ஒருமுறை அவரது மேஜை டிராவிலிருந்து ரூ. 3-12-0 பெறுமான ஸ்டாம்புகள் திருட்டுப்போயின. அவர் அதற்குச் சொன்னதாவது: இன்று நான் ஒரு பாடம் கற்றுக்கொண்டேன். அந்தப் பாடத்

திற்கு Fees ரூ. 3-12-0. அது என்ன பாடமென்றால் ஸ்டாம்ப் முதலியவற்றைப் பத்திரப்படுத்த வேண்டுமென்பதே! அவர் முகம் எப்பொழுதும் மலர்ந்த புன்முறுவலுடனிருக்கும்.

அவரை நான் கடைசியாக அவர் சொந்த தேசத்தில் Braunsweich என்ற நகரத்தில் சந்தித்தேன். அப்பொழுதுதான் அவர் ஒரு புது வீட்டில் குடிவந்திருந்தார். நான் அவரைப் பார்த்த போது அதிக சந்தோஷத்துடன் "நீங்கள் இந்த வீட்டில் என் முதல் விருந்தாளியாக வந்ததுபற்றி அதிக மகிழ்ச்சியுறுகிறேன்" என்று சொன்னார்.

அவருடைய உலகத்தொண்டு முடிவடைந்தது. இந்தியாவில் சுமார் 44 வருடங்கள் அவர் உழைத்திருக்கிறார். "நல்லது உத்தமமும் உண்மையுமுள்ள ஊழியக்கார—உன் எஜமானனுடைய சந்தோஷத்திற்குள் பிரவேசி" என்று ஆண்டவர் அவரைத் தம்மிடம் அழைத்துக் கொண்டார்.

சா. தேவநேசன்.

## சபை ஐக்கியம்

1948ஆம் டிசம்பர் மாதம் 14, 15, 16-ம் தேதிகளில் சபை ஐக்கியத்தைப் பற்றிச் சென்னையில் நடந்த கூட்டத்தில் தென் இந்திய சபை, லுத்தரன் சபை, பாப்திஸ்து சபைகளின் பிரதிநிதிகள் வந்திருந்தார்கள். லுத்தரன் பிரதிநிதிகள் சுவிசேஷ லுத்தரன் சபை ஐக்கிய சங்கத்தாலும் (F. E. L. C.) தமிழ்ச் சுவிசேஷ லுத்தரன் சபையாலும் அனுப்பப்பட்டவர்கள். மூன்று சபையாரும் தத்தம் எண்ணங்களை எடுத்துரைத்தனர். தென் இந்திய சபையார் தம்மோடு சேருவோரின் விருப்பிற்கிணங்க அவர்கள் ஏற்படுத்திய திட்டத்தைக் கூட்டவும் குறைக்கவும் மாற்றவுங் கூடுமென்றனர். மணமான பின்னரே மணமக்கள் ஒருவரோடொருவர் நெருங்கிப் பழகி, ஒருவரையொருவர் நன்கறிந்து அன்பு காட்டுவர். அவ்வண்ணமே, தென் இந்தியாவிலுள்ள பல சபைகளும் முதலாவது ஐக்கியத்தில் சேருமானால், ஒரு சபையின் கொள்கைகளைப் பிறசபைகள் நெருங்கிப் பழகுவதால் அறிந்து ஏற்றுக் கொள்ள வழியுண்டு. இவ்வெண்ணத்தை எல்லோரும் ஒத்துக் கொள்ளவில்லை. மணமகன் பெண்ணைப்பற்றி ஓரளவாவது அறிந்த பின்னரே அவளை மணப்பான். பிறசபைகளின் கொள்கைகளைப்பற்றி யறியாமல் ஐக்கியத்தில் சேருவது இயலாது என்றனர் ஒரு சிலர். கடந்த பெரிய யுத்தத்திற்குப் பின் ஜெர்மனியில் ஒரு சபை ஐக்கியம் ஏற்பட்டிருக்



கிறது. அதில் சேர்ந்துள்ள சபைகள் ஒரு வீட்டிலுள்ள பல அறைகளில் வாழும் பல குடிகளைப் போலிருக்கின்றனர். அவர்களுக்குள் ஐக்கியம் உண்டு. ஆயினும் தடைச் சுவர்கள் இடிக்கப்படவில்லை. அத்தகைய ஐக்கியம் தென் இந்தியாவில் ஏற்படலாகாது என்பது பலரது துணிபு.

தென் இந்திய சபையுடன் சேருவதற்குத் தடைகள் யாவையெனக் கேட்டபொழுது லுத்தரன் சபையார் அச்சபையில் இப்போதுள்ள போதகம் மிகக் குறைவுள்ளதென்றும், அவ்வாறிருப்பது பெருங் கேடு விளைவிக்குமென்றும் கூற, பாப்திஸ்து சபையார் தம் கொள்கைகளை விட்டுவிட்டு, குழந்தை ஞானஸ்நானத்தையும், அத்தியக்ஷ ஆட்சியையும் ஏற்றுக் கொள்வதற்கு விருப்பமற்றவராய்ப் பேசினர். தம் கொள்கைகளை மாற்றாது ஐக்கியத்தில் சேர வழியுண்டோவென அறிய விரும்பினர்.

கூட்டத்தின் முடிவில் எல்லோரும் கிறிஸ்துவுக்குள் ஒன்றாய்க் கூடிப் பேச இடமளித்த கடவுளுக்கு நன்றி செலுத்தி, அத்தகைய கூட்டம் 1949-ஆம் செப்டம்பர் மாதம் மீண்டுங் கூடித் தொடர்ந்து பேசலாமென்றும், இடையில் ஒவ்வொரு சபையின் சார்பாகவும் நால்வர் தெரிந்தெடுக்கப்பட்டு அவர்கள் போதகத்தைக் குறித்துப் பேசலாமென்றும் தீர்மானிக்கப்பட்டது. D. R.

## வாலிபர் பகுதி

### 1. தாமரைப் பொய்கை

'கர்த்தர் உன்னை நித்தம் நடத்தி, மகா வறட்சியான காலங்களில் உன் ஆத்துமாத்தைத் திருப்தியாக்கி, உன் எலும்புகளைப் புஷ்டியாக்குவார். நீ நீர்ப்பாய்ச்சலான தோட்டத்தைப் போலேயும் ஜலங்கள் வற்றாத நீரூற்றைப் போலேயும் இருப்பாய்' (ஏசா. 58: 11.)

வாழ்க்கைக்கு இன்றியமையாத நீரற்ற காலம் வறட்சி காலம். மழையில்லையாயின் பூமி வறண்டுபோகும். ஈண்டுக் குறிக்கப்படுவது பூமி வறட்சியன்று, ஆத்தும வறட்சி. ஆத்துமாவின் தாகத்தைத் தீர்ப்பது கிடையாவிடில் ஆத்தும வறட்சி உண்டாகும். அச்சமயங்களில் தோழமையற்று, உதவியின்றி ஆத்துமா தவிக்கும். இத்தகைய வறட்சியின்றிக் கர்த்தர் நடத்துவதில்லை. ஆனால், 'வறட்சி காலங்களில் ஆத்துமத்தைத் திருப்தியாக்குவார்.' தேவையான நீரை நிரம்பக் கொடுப்பார். அத்தோடமையாது அவ்வாத்துமா பிறர்க்கும் தான் பெற்ற நீரையளிக்குமாறு அதை வற்றாத நீரூற்றாக்குவார்.

இது தேவ வாக்கு. இவ்வாக்கு உண்மையெனக் கண்டவர்களுள் ஒருவர் தானியேல். அவருக்கு வந்த வறட்சியின் காலம் மூன்று வாரம். (தானி. 10: 2.) அக்காலம் முடிந்தபின் அவருக்குக் கர்த்தரால் பெரிய காரியம் வெளிப்படுத்தப்பட்டது.

வறட்சியின் காலம் சோதனை நிரம்பிய காலம். நம் விருப்பம் போல் காரியங்கள் நடைபெறுமட்டும் நம் விசுவாசம் பலமுள்ளதாயிருக்கும். தேவ சித்தம் நம் விருப்பத்திற்கு மாறுயிருக்குமாயின் நாம் மனச் சோர்வடைவோம். அப்பொழுது நம் விசுவாசமும் குன்றும். துன்பகாலம் நீடிக்குமாயின் விசுவாசம் மறைந்துபோவதுமுண்டு. நம்பிக்கையை இழக்காதிருப்போருங்கூட: 'எதுவரைக்கும், கர்த்தாவே, முடிவின்றி நீர் என்னை மறந்திருப்பீர்? எதுவரைக்கும் உமது முகத்தை எனக்கு மறைப்பீர்?' (சங். 13: 1.) என்று புலம்புவதுண்டு. ஆயினும், செடியாகிய கிறிஸ்துவில் கொடிபோல் பற்றிக் கொண்டிருக்கும் மக்கள் வறட்சி காலத்தில், நீரில் மூழ்கும் மாந்தன் சிறு துரும்பையும் பற்றிப் பிழைப்பதுபோல், அவரது வாக்குகளைப் பற்றிப் பிடித்து, தம் நம்பிக்கையில் உறுதியாயிருந்து உயிர் தப்புவர்; புதிய நன்மைகளைப் பெருக்கமாகப் பெற்றுத் திகழ்வர். இவ்வுண்மைக்கு எடுத்துக் காட்டுகளாக விளங்குவோர் யோசேப்பு, பவுல் முதலியோர்.

தாமரைப் பொய்கையில் நீருள்ளளவும் பறவைகள் அதனண்டை வந்து தங்கும். நீரற்று வறட்சியுண்டான காலத்தில் அதினின்று பிரிந்துபோகும். வாழ்க்கையில் வரும் வறட்சி காலங்களிலும் துன்பம் உற்றுழியும்போது நம்பிக்கையிழந்து மருளவிழுவோரும், தம் கடமையினின்று விலகுவோரும், தகுதியற்ற செயல்களைச் செய்து நடப்போரும் அற்றகுளத்தில் அறுநீர்ப்பறவை போலாவார். அவர்களிடம் உயிரில்லை. கிறிஸ்துவின்மீது சார்ந்து அவரது நீரூற்றில் பருகி உயிரைப் பெற்று வாழ்வோர், வறட்சி காலத்திலும் குளத்தை விட்டு நீங்காத கொட்டியும் ஆம்பலும் நெய்தலும் போலாவர். வறட்சிக்குப் பின் வற்றாத நீரூற்றைப் பெற்றுத் தாமும் உண்டு, பிறர்க்குமீவர்.

அற்ற குளத்தில் அறுநீர்ப் பறவைபோல்
உற்றுழித் தீர்வார் உயிரற்றோர்—அக்குளத்தில்
கொட்டியும் ஆம்பலும் நெய்தலும் போலவே
ஒட்டி யுறுவார் உளரே.

D. R.

---

ஜெர்மனியிலுள்ள நமது பழைய மிஷனேரிமார் Christmas ஈவுகளாக நமது பேரால் பெற்றுக்கொண்ட 45 சிப்பங்களுக்காக நன்றி செலுத்துகிறார்கள்.



## 2. இளைஞர் மாநாடு, அலகாபாத்

கடந்த ஆண்டு ஆஸ்லோ என்ற இடத்தில் நடந்த உலக இளைஞர் மாநாட்டின் எதிரொலியாகவே, அகில இந்திய இளைஞர் முதலாவது மாநாடு சென்ற டிசம்பர் 23-28 தேதிகளில் தேசியக் கிறிஸ்தவ கழகத்தின் ஆதரவில் அலகாபாதில் கூடிற்று. இந்தியா, பர்மா, பாக்கிஸ்தான் இலங்கைமுதலிய பல பகுதிகளிலுமுள்ள பற்பல திருச்சபை இளைஞர் கழகங்களினின்றும் 200 பேருக்குமேல் பிரதிநிதிகள் வந்திருந்தனர்.

ஈவிங் கல்லூரித் தலைவர் Dr. மால்வியா பிரதிநிதிகள் அனைவரையும் வரவேற்றுப் பேசி, திரு. ஜான் ஸாதிக் ராஜ்குமார் அம்ருத் கௌரி, கவர்னர் ஜெனரல், அகில உலக Y. M. C. A. செயலாளர் ஆகியோரிடமிருந்து வந்த வாழ்த்துச் செய்திகளைப் படித்தார்.

நாள்தோறும் காலையில் கனோன் ஜார்ஜ் ஸிங்கர் (நாகபுரி அத்தியட்சராக நியமிக்கப்பட்டவர்) தியான வழிபாடுகளைத் திறம்பட நடத்தினர். "நேரத்தின் அழைப்பு" (Call of the hour) என்ற பொருளை அவர் மகுடமாக வைத்து விவரித்த அவரது வேத வாக்கியங்கள் அனைவரையும் வயப்படுத்தின. பிசாசின் வேலையாகிய பிரிவினை நாட்டில் மட்டுமல்ல, வீட்டில் மட்டுமல்ல—திருச்சபையிலும் கூட—இருக்கும் பரிதாபக் காட்சியைப் படம் பிடித்துக் காட்டிய பான்மை போற்றுதற்குரியது. திருச்சபை ஒற்றுமையின் இன்றியமையாமை இடையிடையே வற்புறுத்தப் பெற்றது. அழைப்பு—யாருக்கு? யாரிடமிருந்து? எதற்காக? ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டுமா? என்ன ஆயத்தம் தேவை? என்பனவற்றைத் தெள்ளிதின விளக்கி 'இளைஞரின் உள்ளத் தூய்மையின் தேவையை' எடுத்துக் காட்டினர்.

N. C. C. செயலாளர்களில் ஒருவரான திரு. ஜான் ஸாதிக் நிகழ்ச்சி நிரலை நன்கு வாசித்து, பிரதிநிதிகள் பால் சுமத்தப்பட்டிருக்கும் பெரும் பொறுப்பை 4 தலைப்புகளில் சுட்டிக் காட்டினர்.

1. 'விடுதலையின் அறைகூவல்'(The challenge of Freedom) என்ற பொருளில் ஸஹாரன்பூர் திருமறைக் கல்லூரியில் உள்ள Dr. ஸுர்ஜித் ஸிங் பேசினர். கேட்டிலிருந்து, நன்மைக்கு விடுதலை. பசியினின்று, பயத்தினின்று விடுதலை. ஆனால் எதற்கு இவ்விடுதலை? நல்வாழ்விற்கு அடிப்படையாக. தனி மனிதனின் உரிமை பறிபோகாமல் இருக்க. உயரிய பண்புகள் பெறுதற்கு விடுதலை. பேச்சு, வழிபாடு முதலியவற்றில் சுதந்தரம். விடுதலை வேட்கை மனிதனில்

எவ்வாறு எழுந்தது என்பது முதல், இப்பொழுது மனிதனுக்கும் விடுதலைக்கும் உள்ள சம்பந்தம் என்ன என்பது ஈறாக, அவர் விவரித்தார்.

2. கிறிஸ்தவ அலுவலின் அறைகூவல் (The challenge of Christian Vocation) என்பதுபற்றித் திருமதி S. சாக்கோ அம்மையார் பேசினர். வாழ்க்கையை வளமுற நடாத்த உறுதுணையாக ஒரு வேலை தேடும் பொறுப்பு ஒவ்வொருவருக்கும் உண்டு. அவரவர்க்கு அளிக்கப்பட்டிருக்கும் பிறவிப் பண்புகளுக்கு (innate qualities) மாறுபடாமல், அழைப்பையும் அலட்சியம் செய்யாமல் உள்ள ஒரு அலுவல் தேவை. நரம்புக் கருவிகளில் தடித்த நரம்பு மெல்லொலியையும், மெல்லிய நரம்பு வன்னொலியையும் எழுப்புதல் எங்ஙனம் அனுபவ சாத்தியமற்றதோ, அதைப் போன்றே திறமைக் குறைவுள்ளவர்கள் திறமை மிகுந்த வேலையைச் செய்ய முடியாது. நமது திறமைப் பண்புகளின் தராதரத்தைச் சீர்தூக்கிப் பார்த்த பின்னரே நாம் நமது அலுவலை மேற்கொள்ளத் துணியவேண்டும். குறித்த வேலைக்கு நமக்கு இயல்பாக உள்ள தகுதியைச் சோதித்தறிய மேல்நாட்டார் கண்டுபிடித்துள்ள மானஸீகத் தேர்தல்களை (Psychological tests) நாமும் நமது முறைப்படி மாற்றிப் பயன்படுத்த வேண்டும் என்ற சாரம் கொண்ட பேச்சு நிகழ்த்தினர்.

3. போது உடமையின் அறைகூவல் என்ற தலைப்பில் Dr. வைரணபிள்ளை M. A; Ph. D. ஒரு சொன்மாரி பொழிந்தார், பொது உடமை உறுப்பினர்களின் தன்னலமற்ற சேவையையும். அவர்கள் அணையா ஆர்வத்தையும், சலியா உழைப்பையும், உறையா ஊக்கத்தையும் நமக்கு முன்மாதிரியாக வைக்கவேண்டும் என்று வற்புறுத்தினர். ஏழைத் தொழிலாளிகளை நாம் சரிவர அணுகாத குறையையும், அவர்கள் படிப்பதற்கான நூல்கள் இல்லாமையையும் அடியோடு போக்கவேண்டுமென உரைத்தார்.

ஊழியத்தின் அறைகூவல் என்ற பொருளில் காந்தி கிராம் R. R. கைத்தான் சிறந்த சொற்பொழிவாற்றினர். கிராமங்களில் வாழ் மக்களின் முன்னேற்றத்திற்கு இளைஞர் உழைக்க வேண்டியதின் அவசரத் தேவையை விளக்கினர். "எனது சகோதரன் குறைந்த வருவாயில், எளிய உணவில், கிழிந்த ஆடையில்—கூரையில் வாழ்கையில்—நான் மட்டும் நகர உல்லாசத்திலும், ஆடம்பர ஆடையிலும், விதவிதமான உணவு வகைகளிலும், ஓய்வு நேரங்களில் மஞ்சத்தில் சாய்ந்திருத்தலும்—எங்ஙனம் இயலும்? கிறிஸ்து பெருமானின் அடிச்சுவடுகளைப் பின்பற்றும் நாம், நமது கருத்தைத் தொண்டிலும், தியாகத்திலும் செலுத்த வேண்டுமென்று, உருக்கும்



குரலில், உருக்கும் வன்மையுடன், எங்கள் இதய திரைகளில் அழியாச் சித்திரமாக வரைந்து காட்டி விட்டார்.

மாலை நேரங்களில் இளைஞனும் வேதாகமும், இளைஞனும் திருச்சபையும், இளைஞனும் வழிபாடும், இளைஞனும் சுவிசேஷ வேலையும் என்பதுபற்றி முறையே Rev. W. ஸ்டுவர்ட், ஜான் ஸாதிக், V. M. கோஷி, C. அரங்காடன் ஆகியோர் சிறந்த செவி விருந்தளித்தனர்.

காலைப் பொருள்களைப்பற்றியும், மாலைப் பொருள்களைப்பற்றியும், இத்துடன் இளைஞரது எதிர்கால வேலை, சமூக வேலை என்பன வற்றையும் சேர்த்து, ஆராய்ந்து, தமது முடிவுகளைக் கடைசி நாளன்று வெளியிடுமாறு திட்டமிடப்பட்டது. ஒவ்வொருவரும் தத்தமக்குப் பிரியமான பொருளைத் தெரிந்துகொள்ளும் அனுமதி இருந்தது. ஆனல் மாநாட்டில் மூன்றில் ஒரு பகுதியினர்க்குமேல், "இளைஞரது எதிர்கால வேலைத்திட்டம்" என்பதுபற்றி ஆராயப் புகுந்தனர். குறித்த தலைவர்களின் கண்ணோக்கத்தின்கீழ் இளைஞர் தங்கள் கருத்துக்களை அஞ்சாது வெளியிட்டனர்.

A. மீனுசோன்.

## இக்கட்டில் சகாயம்.

மேற்கத்திய நகரங்கள் ஒன்றில் ஒரு வீட்டிற்குள் கணவனுக்கும் மனைவிக்கும் பின் வரும் சம்பாஷணை நடந்தது.

**கண:** ஜேனம்மா, இனி என்னல் தாங்கமுடியாது, நான் வெளியே போகிறேன். ஏதேனும் ஒரு வழிபிறக்கும்.

**மனை:** அத்தான். இந்தக்குளிரிலா, இந்த இராப்பட்ட நேரத்திலா?

**கண:** நமக்கு வாகு வழிதெரியாமல் விழிக்கப்பண்ணும் உள்ளிருளைப் பார்க்கிலும் வெளியிருள் பெரிதா? நீ என்னை மணந்திராவிட்டால் உனக்கு இவ்வளவு சங்கடம் இராதே.

**மனை:** அப்படிச் சொல்லவேண்டாம், அத்தான். நான் உங்களுக்கு வாழ்க்கைப் பட்டதற்காக எள்ளளவும் வருத்தப்படுகிறதில்லை.

**கண:** நீயும் பிள்ளைகளும் வெம்பட்டினி கிடந்து மடிகிறீர்களே.

**மனை:** கலங்கித் தவிக்காதேயுங்கள், ஆண்டவர் நம்மைக் கைவிடமாட்டார். இன்றிரவே நமது நிலைமை மாறினாலும் மாறலாம். நாளை காலையில் நாம் மகிழ்ந்திருக்கக்கூடும்.

கணவன் தலையை அசைத்து : ஜேனம்மா! உன்விசுவாசம்பெரிதே. நான் ஒவ்வொரு நாளும் வேலைக்காக அலைந்து திரிந்து கொண்டுதான் வருகிறேன். ஐம்பது இடங்களில் கேட்டுப்பார்த்தேன். எங்கும் இடமில்லை என்றுதான் உத்தரவு.

இப்படிப் பேசிக் கொண்டிருக்கையில் தூங்கின ஜிம்மி என்கிற பையன் விழித்து : அம்மா எனக்கு வயிற்றைப் பசிக்கிறது, எனக்கு ஒரு துண்டு ரொட்டி கொடுக்கமாட்டீர்களா என்க, தாயானவள் : என் கண்மணியே, என்னிடம் ரொட்டியில்லையே என்றாள். பையன்: எப்போது ரொட்டிவரும் என்று பரிதாபமாய்க் கேட்க, தாய் மறுமொழி சொல்லாமல் அழுதாள். அப்பொழுது தகப்பன் : ஜிம்மி, நான் உனக்கு ரொட்டி கொண்டுவருகிறேன் என்று சொல்லி வெளியேபோக எத்தனித்தான். மனைவியோ, இந்தச் சொல்லி முடியாத சங்கடத்தில் புருஷன் என்ன செய்யப்போகிறானோ என அஞ்சி, அவன் கையைப்பிடித்துக் கொண்டு தரித்திரம், மகாசங்கடம், ஆயினும் அதைப் பார்க்கிலும் அதிகக் கெடுதியான காரியங்களுண்டு என்பதை மறவாதேயுங்கள் என்றாள். அவனோ பதிலொன்றுஞ் சொல்லாமல் வெளியே போனான். அவன் வீதி நெடுகப் போகையில் அவனுக்குண்டான கலக்க நினைவுகள் கொஞ்சமல்ல.

பீற்றர் என்றபேருள்ள இந்த ஆள் நல்ல வேலைக்காரன், கைத்தொழிலில் தேர்ந்தவன். அவன் கிராம வாசியாயிருக்கையில் க்ஷேமமாயிருந்தான். அவன் நகர வாசியான காலம் க்ஷாமகாலமாயிற்று. நகரவாசியான துவக்கத்தில் கொஞ்சம் சுகமாயிருந்தும், வரவரச் சரிப்படாமற் போயிற்று. தொழிலாளிகளுக்கு வேலைகிடைப்ப தரிதாயிற்று. நமது கதாநாயகன் எவ்வளவோ பிரயாசப்பட்டும், வேலை கிடைக்கவில்லை, சாப்பாட்டுக்கு வழியில்லை. பிரஸ்தாப இரவில் அவன் வீட்டைவிட்டு வெளியேறினபின், பிள்ளைக்கு உணவு சம்பாதிப்பதற்கு என்ன செய்வதென்று அறியாமல் தான்போட்டுக் கொண்டிருந்த சட்டையை விற்கலாமோ எனயோசனை செய்தான்.

அச்சமயத்தில் பணிக்காய் உடுத்திய பெரியார் ஒருவர் அத்தெருவழியாய்ப் போனார். அவர் பெயர் வில்லியம்ஸ். ஒரு பெரிய தொழிற் சாலைக்குச் சொந்தக்காரர். இரண்டு நாளைக்குமுன்னமே தான் இவரிடத்தில் பீற்றர் என்பவன் வேலை தேடிப்போனான். வேலையில்லையென்று சொல்லிவிட்டார். இவர் அந்த ஏழை மனுஷனைக் கடந்து முன் செல்லுகையில் தமது சட்டையைப் பைக்குள் கை போட்டு கைக்குட்டை எடுத்தார். அப்பொழுது அவருடைய குறிப்புப் புத்தகம் கீழேவிழுந்தது. இதுவோ அவருக்குத் தெரியாது. பீற்றர் அதை எடுத்தான். அதில் ஏதேனும் பணம் இருக்கும், வீட்டுக்கு ஆகாராதிகள் வாங்கிக் கொண்டு போகலாமென்று நினைத்



தான். உடனே: இதில் இருப்பது என் பணம் அல்லவே என்கிற நினைவு முந்தின நினைவை எதிர்த்து நின்றது. ஏனெனில் அவன் நாணயஸ்தன். அவனது நினைவும் துர்நினைவும் ஒன்றோடொன்று போராடியபின் நல்நினைவு அவனை மேற்கொள்ள, அவன் அந்தப் பெரியாருக்குப் பிறகேஓடி, அவர் தோளைத்தட்டி, குறிப்புப் புத்தகத்தை அவரிடம் ஒப்புவித்தான்.

அப்பா, நீ செய்தது பெரிய உபகாரம், அது கீழே விழுந்தது எனக்குத் தெரியாமல் போயிற்றே என்றுசொன்னார். அப்பொழுது பீற்றர் : நான் அதை அபகரித்துக் கொள்ள எண்ணங்கொண்டதுண்டு என்றான். அப்படிச் செய்திருந்தால் அது அயோக்கித்தனமாம் என்று பெரியார் மொழிந்தார். அதற்கவன் : அது அயோக்கியந்தான், ஆயினும் ஒருகாசுக்கும் வழியில்லாமல் மனைவி மக்களோடு கஞ்சியின்றி காய்கிறவன் யோக்கியனா யிருப்பது சங்கடந்தான் என்றான்.

துரை அவன் குடும்பநிலைமையைக் குறித்து விஜாரித்தபின் பீற்றர்: ஐயா, இரண்டு தினங்களுக்குமுன் தங்களிடம் வந்தேன் என்றான். அப்பொழுது துரை: எனக்கு இப்பொழுதுதான் உன்னைத்தெரிகிறது. இன்னம் உனக்கு வேலைகிடைக்கவில்லையா என்று வினவ, அவன் : வேலை கிடைக்குமானால் நான் மிக்க நன்றியறியாதவனாயிருப்பேன் என்றான். அதற்கு அவர்: எனது மேஸ்திரி ஒருவன் நேற்றுத்தான் வேலையை விட்டுப்போனான், அந்தவேலையை ஒப்புக்கொள்வாயா? சம்பளம் வாரத்துக்கு 80 ரூபாய் என்றார்.

அதில் பாதிச்சம்பளம் கிடைத்தாலும் போதும், வேலையை ஒப்புக்கொள்ளுகிறேன் என்று அவன்சொல்ல, தொழில்காரர் : நாளை காலையில் என்னிடம்வா, தற்சமயம் இதைச் செலவுக்கு வைத்துக்கொள் என்றுசொல்லி அவன்கையில் நூறு ரூபாய் நோட் ஒன்றைக் கொடுத்தார். அவனோ வியப்புற்று ஐயா, நூறு ரூபாய் கொடுத்தீர்களே என்றுரைக்க, பெரியார்: அதுஎனக்குத் தெரியும், என்னுடைய குறிப்புப் புத்தகத்தில் பதினையாயிரம் ரூபாய்க்கு நோட்டுகள் இருந்தன. நீ அதை எனக்கு எடுத்துக் கொடுத்திரா விட்டால், அவ்வளவையும் இழந்திருப்பேனே என்றார்.

ஆண்டவர் தங்களை ஆசீர்வதிப்பாராக என்று பீற்றர் சொல்லி, கடைக்குப்போய் குடும்பத்திற்கு வேண்டிய போசன பாளுதிகளை வாங்கிக்கொண்டு வீடு போய்ச்சேர்ந்தான். அப்பா, ரொட்டி கொணர்ந்தீர்களா என்று ஜிம்மிப்பையன் கேட்க, தகப்பன்: ரொட்டி மாத்திரம்அல்ல, இறைச்சி, தேயிலை, சர்க்கரை யெல்லாம் வாங்கி வந்திருக்கிறேன். நாம் ஆண்டவருக்கு நன்றி செலுத்தி திருப்

தியாய்ச் சாப்பிட்டு மனமகிழ்ச்சியா யிருப்போம் என்று சொல்லி, தான் வெளியே போனபின் நிகழ்ந்த யாவற்றையும் அவர்களுக்கு விபரமாய்த் தெரிவித்தான். தாய் தகப்பனும் மூன்று பிள்ளைகளும் அன்று அனுபவித்த ஆனந்தம் பெரிது.

பீற்றர் வேலையில் அமர்ந்தான். அவனுடைய நேர்மைக்காக அவன் எசமான் அவனைப் புகழ்ந்து, அவனைமிகுந்த பட்சமாய் நடத்தினான். ஆண்டவருடைய கிருபையால் அவன் அதுமுதல் தாழ்ச்சியின்றி வாழ்ந்தான்.

## புத்தக மதிப்புரை

அன்னியபாஷை என்ற தலைப்பின்கீழ் 14 அத்தியாயங்களுள்ள ஓர் சிறந்த நூலைத் தமிழ் கிறிஸ்தவ சபைக்கு ஈவாய் வெளியிட்டிருக்கும் ராவ்சாகிப் பவுல் கடாட்பவனம் அவர்களுக்கு நாம் மிகவும் கடமைப் பட்டிருக்கிறோம். தேவாவியானவரைப் பெற்றுக் கொண்ட கிறிஸ்தவர்களுக்கு அன்னியபாஷை பேசுதல் இன்றியமையாத அறிகுறி எனப் போதித்து சுவிசேஷ சபைகளில் குழப்பங்களுண்டாக்குவோரின் முயற்சிகளை வியர்த்தமாக்கவும், கிறிஸ்தவ சபையில் புத்துயிருண்டாக்கவும் விரும்பி வேத ஆதாரங்களுடன் மனதை அசைக்கும் இனிய தமிழ் பாஷையில் எழுதியிருக்கும் இச் சிறந்த நூலை கிறிஸ்தவர்கள் ஒவ்வொருவரும் வாசிக்க வேண்டியதவயம். 64 பக்கங்களுள்ள இந்நூலை சென்னை C. L. S. புத்தக சாலையிலாவது, செங்கல்பட்டு, மேட்டுத் தெருவில் வசிக்கும் ஆசிரியருக்காகிலும் உடனே எழுதி வாங்கி வாசித்துப் பிறரும் அதைப் படிக்க வழி செய்வோமாக. இதன் விலை 8 அணா தான். இதிலடங்கிய பொருளை விலைமதிக்க முடியாது. மாஜி மகாகனம் Bexell அத்தியக்ஷர் மூலமாய் கிறிஸ்துவின் காட்சிபெற்று, இந்துமதத்தைத் துறந்து கிறிஸ்துவுக்குத் தன்னை ஒப்புக்கொடுத்தவர் இந்நூலின் ஆசிரியர்.

## திருச்சபை நிகழ்ச்சிக் குறிப்புகள்

1. லால்குடி: 1918ஆம் டிசம்பர் 3உ கொள்ளிட மிஷனைச் சேர்ந்த ஊழியர் ஒடுக்கக் கூட்டம் கொள்ளிட வட்ட தலைவர் கனம் ந. சாமுவேல் ஐயரால் லால்குடியில் கூட்டப்பட்டது. காலைக் கூட்டத்தில் சங். I. அப்பாதுரை ஐயரும் மாலையில் சங். G. G. ஆச்சரியம் ஐயரும் தலைவர்களாக இருந்து கூட்டத்தை நடத்தினார்கள். மறுநாட்களான 4-ம் 5-ம் தேதிகளில் திருச்சிராப்பள்ளி கிறிஸ்தவ நன்முயற்சி சங்க ஆதரவில் லால்குடி த. சு. லு. குரு ஸ்தானத்தில் சங். ந. சாமுவேல் ஐயரால் சுவிசேஷ ஊழியம் நடத்தப்பட்டது. பவிஞ்சு பவிஞ்சாக சுமார் 150 பேர் இந்துக்கள் நடுவே



சுவிசேஷ பிரச்சாரங்களும், ஒளிச்சித்திர காட்சிகளும் நடத்தினர்கள். அநேக ஸ்திரீகள் சாட்சி கொடுத்தனர்.

லால்குடி, மணக்கால், வளவனூர், வழுதியூர் முதலிய இடங்களில் ஸ்ரீமான் S. ஆரோக்கியசாமி, ஸ்ரீமதி பாக்கியம், கனம் G. D. பிரான்சிஸ் ஐயர் முதலியோர் சத்காலக்ஷேபங்கள் நடத்தினார்கள்.

"சரோஜா."

2. தொண்டமான் புதுக்கோட்டை வட்டம் லுத்தரன் மிஷன் சங்கத்தாரால் ஒப்புக் கொள்ளப்பட்டு சென்ற டிசம்பர்மீ 16-ம் தேதியோடு நூறு வருஷமாகிறது. இதற்கு நூற்றாண்டு வைபவத்தை வருகிற ஏப்ரில் மாசத்தில் நடத்த உத்தேசம். இவ்வட்டத்திலிருந்து வெளியேறியிருக்கும் கிறிஸ்தவர்களில் பலரை தமிழ்நாடெங்கும் காணலாம். அவர்களில் பலர் ஆண்டவருக்குச் சித்தமானால் இக் கொண்டாடத்தில் பங்குபெற அழைக்கப்படுகிறார்கள். இதற்கென்று பொருளுதவி செய்ய விரும்புவோர் தங்கள் ஈவுகளைப் புதுக்கோட்டையிலிருக்கும் கனம் R. Aneer ஐயருக்கு அனுப்பலாம்.

## கிறிஸ்தவ சிஷ்ய சங்கம்

1. சுற்றுக் கடிதத்தில்கூறியபடி வேத ஆராய்ச்சிக் குறிப்புக்கள் தயாராய் இருக்கின்றன. கிளைச்சங்கக் காரியதரிசிகள் தங்களுக்கு எத்தனைப் பிரதிகள் தேவை என்பதை உடனே எழுதும்படிக் கேட்டுக் கொள்ளுகிறேன். இவ்வாராய்ச்சிக் குறிப்புக்கள் ஓர் சிறிய வியாக்கியானம் போன்றும் இருப்பதால் அநேகர் இதைப் பயன்படுத்துமாறு வேண்டுகின்றேன்.

2. கடவுளுக்குச் சித்தமானால் நமது 28-வது கிறிஸ்தவ சிஷ்ய சங்க மகா நாடு மேமீ முதல் வாரத்தில் தரங்கையில் கூடும். வாலிபர் திரண்டுவர வேண்டுகின்றேன். இப்போதிருந்தே இம்மகா நாட்டுக்காக ஜெபிக்கக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

3. மகா நாட்டின்போது நமது ஆண்டு மலர் வெளிவரும். கட்டுரைகள் அனுப்புவோர் இம்மாதம் இறுதிக்குள் அனுப்பும்படி மிகவும் பரிவுடன் வேண்டுகின்றேன்.

4. புதிதாய் ஸ்தாபிக்கப்பட்ட கிளைச் சங்கங்களும், இதுவரை தங்களது இணைப்புக் கட்டணத்தைச் செலுத்தாதச் சங்கங்களும், இணைப்புக் கட்டணமாகிய இரண்டு ரூபாயை உடனே அனுப்பி வைக்கக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

'அமிர்த நிலையம்'
தரங்கம்பாடி. 18-1-'49.

ஆ. சா. ராஜேந்திரம்
காரியதரிசி.

## சந்தேக வினாவிடை

வினா: "இங்கே கிட்டிச்சேராதே, உன் கால்களிலிருக்கிற பாதரட்சையைக் கழற்றிப் போடு; நீ நிற்கிற இடம் பரிசுத்த பூமி" என்று ஆண்டவர் சொல்லியிருக்க, (யாத். 3: 5) தற்காலத்தில் குருமார் கால் ஜோடுகளோடு பீடத்தில் பிரவேசித்து தேவாராதனை நடத்துவது சரியா?

விடை: பரிசுத்த இடம், பரிசுத்த மனுஷர் என்னும் வேற்றுமை புதிய உடன்படிக்கையின் காலத்தில் கிடையாது. தேவாலயத்தின் திரை மேலே தொடங்கிக் கீழேவரைக்கும் இரண்டாகக் கிழிந்ததோடு பரிசுத்த இடமென்பது கிடையாது. நாம் நமது தேவாலயங்களைத் தேவாராதனைக்கென்று பிரித்தெடுத்து வைத்திருக்கிறோம். மேலும் கிறிஸ்தவ பக்தர் அனைவரும் ராஜரீக ஆசாரியக் கூட்டமும் பரிசுத்த ஜாதியுமானவர். (1 பேதுரு 2: 9) குளிர்ச்சி மிகுந்த மேனாடுகளில் காலில் அணிந்துகொள்ளும் ஜோடுகள் அந்நாட்டாரின் உடைகளில் ஒரு பகுதியாகும். ஆதலால் மேனாட்டு உடை தரிப்போர் தங்கள் கால்களில் ஜோடுகள் அணிந்திருப்பதில் பிசகொன்றுமில்லை. ஆகிலும் நமது இந்தியாவில் செலாவணியிலிருக்கும் பழக்கப்படி தேவாராதனைக்கு வருவோரும், ஆராதனை நடத்துவோரும் இந்திய உடை தரித்து, இந்திய வழக்கபழக்கங்களையே அனுசரிப்பது நல்லது. ஐரோப்பிய குருமாரில பலரும் நமது தேவாராதனைகளில் இந்திய முறைகளை அனுசரிப்பதை நாம் இங்குமங்கும் மன உவப்போடு காண்கிறோம்.

[மாதந்தோறும் இத்தலைப்பின் கீழ் வெளியிடத் தங்கள் வினாக்களைச் சகோதரர் சகோதரிகள் தரங்கையிலிருக்கும் பத்திராதிபருக்கு அனுப்பலாம்.]

---

## சிறுவருக்கான வேத ஆராய்ச்சிக் கேள்விகள்

பின்வரும் வாக்கியங்கள் வேதாகமத்தில் எங்கே இருக்கிறதென்று ஆராய்ந்து பார்த்து இடக்குறிப்பை அவ்வாக்கியங்களுக்கு நேரே எழுதி, பின்வரும் விலாசத்திற்கு அனுப்பினால் பிழையற்ற விடைக்கு ரூ. 5. (ஐந்து ரூபாய்) பரிசளிக்கப்படும். சரியான விடை ஒன்றுக்கு மேற்பட்டால் பரிசுத் தொகை பகிர்ந்து கொடுக்கப்படும்.

1. தேவரீர் பார்க்கிற பராபரன்...........
2. என் சகோதரனே, சுகமாயிருக்கிறாயா?...........
3. நான் கொல்லவும் உயிர்ப்பிக்கவும் தக்க தேவனோ?..........

## LUTHERAN N. M. S.

The Lutheran N. M. S. Council has **RESOLVED** to appint a full time Secretary to promote N. M. S. interest among Lutheran Churches in India and to help the work in the Lutheran N. M. S. Field in every possible way. This appointment will take effect from 1st July 1949. The Committee has decided to request one of the supporting bodies to loan the services of a suitable person in its service for a period of two years. Those who wish to offer their services should write immediately to the undersigned and obtain information regarding the scope of work of the full time Secretary of the Lutheran N. M. S.

J. D. Asirvadam,
President, Lutheran N. M. S

## A SCHOOL OF CHRIST-LIKE LIVING
## KODAIKANAL ASHRAM FELLOWSHIP 1949

The kodaikanal Ashrem Fellowship plans to made its 1949 program one primarily of intensive training in Christ-living—one of re-creation of body, mind and Spirit. Youthful leaders of Christ-like spirit are especially welcomed. Older leaders, we hope, will profit greatly by the creative fellowship.

The following is the tentative program which will have to be adjusted to the convenience of the leaders concerned as their own programs develop :

Apr 25-29 "Our Pauline heritage" (a Bible study) R. R. Keithahn
May 2-5 The Kodaikanal Convention
May 9-13 "The Evangelistic Task of the Church" Bishop S.K. Mondol
May 12 The Annual Kodaikanal Fellowship Day
May 16-20 "Lambeth, Amsterdam and the World Church" Bishop
May 23-27 ... ... ... J. E. L. Newbigin and others.
May 30-June 3 "Our New Constitution, Our New Village, Our New

World Steps Ahead". led by the fineings Group of the Ashram.

It is planned to divide the fellowship in four work-groups: "Our Devotional Life", "Our Diet and Health"; "Manual labor"; "Creative Thinking and Planning ' which groups will direet the Ashram life in their own fields of interest and will be led by such experienced leaders as: Bishop H. Pakenham Walsh, Mark Sunder Rao, Dr J. P. Joshua, Dr. M. M. Keithahn, Mrs. Suganthy Charles and others. Each guest must join one of the groups and thus contribute her or his mite to the fellowship as well as receive intensive training and experience in that field.

Further information may be secured from Mrs. L. D. Honeggar, Ashram, Vellore, N. A. DT., or R. R. Keithahn, Gandhi Gram, Ambathurai, S. I. R. Non-members must send Rs 5/ deposit fee with registration. Reservations thould be made early. The Ashram will open April 22 and close June 4.

R. R. Keithahn, Secretary.

(44-ம் பக்கத் தொடர்ச்சி)

4. நாம் இங்கே இருக்கிறது நல்லது...........
5. எல்லாம் ஆயத்தமாயிற்று...........
6. சுத்தவான்களுக்கு யாவும் சுத்தமாயிருக்கிறது...........

விடைகளைப் பதியவைத்து ஒரு அணா தபால் முத்திரையோடு திரு. A. ஞானப்பிரகாசம் அவர்கள், 9, அபிராமி தெரு, வேப்பேரி, சென்னை. அனுப்புகிறவர்கள் தங்கள் விலாசத்தை அடியில் குறிப்பிடவும்.

குறிப்பு: விடைகள் 20-2-49-க்குள் அனுப்பினாலொழிய ஏற்றுக் கொள்ளப்படா.

## மரண அறிவிப்பு

எங்கள் அருமைத் தகப்பனார் மணிக்கிராமம் கனம் S. ஆபிரகாம் உபாத்தியாயர் சில காலம் வியாதியாய் இருந்து 15-12-48 புதன்கிழமை காலை 10-மணிக்கு கர்த்தருக்குள் அமைதலாய் நித்திரையடைந்தார்கள். மறுநாள் அவர்களது பிரேதம் உள்ளூர் கோயிலுக்கு கொண்டுபோகப்பட்டு சபை குரு மாயவரம் கனம் D. பெலவேந்தரம் ஐயரவர்களால் துக்க ஆராதனை நடத்தியப்பின் உடன் ஊழியர், உற்றார், உறவினர், சிநேகிதர் உட்பட சவம் கல்லறைக்கு கொண்டு போகப்பட்டு சகல கிறிஸ்தவ மரியாதையுடன் சபை குருவால் நல்லடக்கம் செய்யப்பட்டது.

"பாசம் கதறுகிறது பரம் களிக்கிறது."

நேரிலும் கடிதங்கள் மூலமாகவும் எங்களுக்கு உதவியும், ஆறுதலும் சொன்ன எல்லாருக்கும் எங்கள் நன்றி உத்தாருக.

| | |
|---|---|
| Mrs. மேரிசார்லஸ் | A. ஜெயதாஸ் |
| | A. தயாகரம் |
| ,, ஜெயாசாமி பிள்ளை | A. நேசம் |
| ,, கிதம்ஸ்மித் | A. கமலம் |

மனைவியார் பரிபூரணம் அம்மாள்

## மரண அறிக்கை

எனது அருமை தாயாரும் ஈரோட்டிலிருந்த மாஜி C. M. அருளானந்தம் பிள்ளை அவர்களின் மனைவியுமாகிய எலிசபேத் ராஜமணி அம்மாள் கோயம்பத்தூரில் சில நாட்களாக வியாதியாயிருந்து, தனது மகன் டாக்டர் நல்லதம்பியின் இல்லத்திற்கு அழைத்து வரப்பட்டு பலவித சிகிச்சைகள் செய்தும், பயன் படாமல் 1849ஞ ஜனவரிமீ 1உ மாலை 6-30 மணிக்கு கர்த்தருக்குள் அமைதலாக நித்திரை அடைந்தார்கள். அவர்களின் சடலம் மறுநாள் 2—1—49 ஞாயிற்றுக்கிழமை காலை 8-() மணிக்கு சகல கிறிஸ்தவ மரியாதையுடன் மிசூரி லுத்தரன் உத்தான பூமியில் உயிர்த்தெழுதலின் நம்பிக்கைக்கென்று நல்லடக்கம் செய்யப்பட்டது. ('அவள் பிள்ளைகள் எழும்பி அவளை பாக்கியவதி என்கிறார்கள்' நீதி,31,28) வயது 71:—

Findland Cottage
Ootacamund

A. D. ASIRVADHAM.

